**திருநெல்வேலி கம்பபாத சேகரன் இ. சங்கரன் இயற்றிய**

**திருநெல்வேலித் தல விநாயகர்**

**பொள்ளாப் பிள்ளையார் பிள்ளைத்தமிழ் பதிகம்**

## காப்புப் பருவம்

திருவாழ் மார்வன் திருக்கரத்து சுதர்சன் பாஞ்ச சன்யமுடன்
பெருத்த கதையாம் கவுமோதம் கூர்மை வாளாம் நந்தகமும்
உருவில் வளைந்த சாரங்கம் உம்பல் முகத்து பொள்ளாத
ஒருகை முகனை புரந்திடவே அஞ்சு படையை வழுத்தினனே! 1.

## செங்கீரைப் பருவம்

ஒளிரும் வதனம் நேர்தூக்கி செவியின் குழைகள் அசைந்தாட
அளியார் விழிகள் விரிந்திடவே அமுத முறுவல் அரும்பிடவே
தளிர்கை ஒன்று தரைபதித்து ததும்பும் மழலை மொழிபேசி
உளிபடா பொள்ளா விநாயகனே உவந்து ஆடு செங்கீரை! 2.

## தாலப் பருவம்

உலகை வயிற்றில் புரந்தவனே உரக பணிகள் புனைந்தவனே
புலன்கள் வென்றார் காண் ஒளியே புலவோர் போற்றும் பெருந்தேவே
நலன்கள் நல்கும் நாயகனே நாதன் அரனார் அரும்புதல்வா
புலம்சூழ் நெல்லை பொள்ளாத புழைக்கை முகனே தாலேலோ! 3.

## சப்பாணிப் பருவம்

இந்து அணிந்த சிரம்நிமிர்த்தி இருகால் அகட்டி நீட்டிவாயில்
சிந்தும் அமுது பணிநனைப்ப சிறிய முறுவல் பூத்திடவே
நந்தும் மணியும் கொண்டிழைத்த நற்கை கடகம் வளையுடனே
சிந்தை ஒலிக்க பொள்ளாத களிறே கொட்டு சப்பாணி! 4.

## முத்தப் பருவம்

புள்ளி மறிகொள் கரத்தானும் பொருப்பு தந்த மலைமகளும்
பள்ளி கொண்ட பெருமானும் பாவை வலபை தாயாரும்
அள்ளிக் கொண்ட திருமுத்தை அடியேன் களிக்க தந்தருளே
பொள்ளா வேழத் திருமுகனே தேனார் முத்தம் தந்தருளே! 5.

## வருகைப் பருவம்

முடிசேர் மதியம் சுடர்விடவே மலர்தாள் தண்டை சிலம்பொலிக்க
அடியர் வேண்டு வரம்தரவே ஐங்கை பணிகள் நலம்தழைய
அடிகள் பஞ்ச தாளசதி அமைத்து தொழும்பர் உளம்பதிய
நெடுஞ்சீர் நெல்லை பொள்ளாத களிற்று முகனே! வந்தருளே! 6.

## அம்புலிப் பருவம்

தக்கன் சாபம் பெற்றவன்நீ தலையில் வைத்துக் காத்தவன்சேய்
நக்கல் செய்த உன்சாபம் நல்ல பூசை ஏற்றுனக்கு
தக்க உயர்வு இவன் அளித்தான் தண்ணார் மதியே அதுஉணர்ந்து
பக்கம் வந்து பொள்ளாத பிள்ளை உடனே ஆடவாரே. 7.

## சிறுபறைப் பருவம்

சிவனார் உரித்த கரித்தோலில் சிறக்கச் செய்த சிறுபறையை
தவள மதிய கோலெடுத்து தாள முதலாம் சதிகூட்டி
புவனம் நிறைக்க ஒலிசெய்து அறமும் அன்பும் நன்னெறியும்
குவிக்க பொள்ளா குஞ்சரமே குதித்துக் கொட்டு சிறுபறையே! 8.

## சிற்றில் பருவம்

கூற்று உதைத்தான் மார்வத்து குதித்து களிக்கும் தாள்அன்றோ
கீற்று நுதலி வல்லபையாள் நயந்து வருடும் அடியன்றோ
ஏற்றம் இலாஎம் சிற்றில்லை சிதைக்கும் உன்தாள் புழுதிபடும்
போற்றி தொழுதோம் பொள்ளாத களிறே சிற்றில் சிதையேலே! 9.

## சிறுதேர் பருவம்

மலையே வில்லாய் மால்கணையாய் அரவு நாணாய் அத்தைதட்டாய்
அலையும் புரத்தை எரிக்கஎழும் தெய்வத் தேரோன் நற்செல்வ
நிலைத்த புகழ்சேர் நெல்லைதேர் ஓடு வீதி பெருமைகொள
கலையார் ஞானப் பொள்ளாத களிறே உருட்டு சிறுதேரே! 10.

முற்றும்